மலர் 14 இதழ் 237

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 20 காசு விமானப் பதிப்பு 25 காசு

Regd. M No 789

Phone No 76190, 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 11—5—74 சனி

வெளியூர் 12—5—74 ஞாயிறு



## சத்தியவாணியிடமிருந்து மேலும் ஒரு எம். எல். ஏ. விலகல்:

# தி. மு. க.வில் சேர்ந்தார்

சென்னை, மே 11—சத்தியவாணிக்கு ஆதரவு தெரிவித்த எம். எல். ஏக்களில் ஒருவரான டாக்டர் சின்னராஜ் மீண்டும் தி. மு. க. வில் சேர்ந்தார்.

மந்திரிப் பதவியிலிருந்து நீக்கப்பட்ட சத்தியவாணிக்கு ஆதரவு தெரிவித்து தி. மு. கழகத்திலிருந்து 10 எம். எல். ஏ.க்கள் ராஜிநாமா செய்துவிட்டதாகக் கூறப்பட்டதும், 8 எம். எல். ஏ.க்கள் அதை மறுத்து அறிக்கைகள் வெளியிட்டிருந்ததும் தெரிந்ததே. மீதமுள்ள இரண்டு எம். எல். ஏ.க்களில் ஒருவர், அரூர் தொகுதியைச் சேர்ந்த டாக்டர் சின்னராஜ்.

தற்போது, சின்னராஜும் தொடர்ந்து, தான் தி.மு.க.வில் இருக்கப்போவதாக அறிவித்திருக்கிறார். இதுகுறித்து சின்னராஜ், முதல் அமைச்சர் கருணாநிதிக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளனர்.

அந்தக் கடிதத்தில் தாழ்த்தப்பட்ட சமுதாயத்திற்கு, முதல் அமைச்சர் கருணாநிதியின் தலைமையே சிறந்தது என்று குறிப்பிட்டுள்ளார்.

முதல்வருக்கு சின்னராஜ் எழுதியுள்ள கடிதம்வருமாறு; அன்புடையீர் வணக்கம்.

உணர்ச்சியால் உந்தப்பட்டு கழகத்திலிருந்து, நான் விலகிவிட்டதாக அறிவித்ததைக் குறித்து வருந்துகின்றேன்.

தாழ்த்தப்பட்டோரின் பாதுகாப்பிற்கும், வளர்ச்சிக்கும் கலைஞரின் தலைமையே பாதுகாப்பான தலைமை என்று நான் கருதுவதால், கலைஞரின் தலைமையில் தொடர்ந்து பணியாற்ற நான், கழகத்தோடு மீண்டும் இணைகிறேன் வணக்கம்.

மேற்கண்டவாறு டாக்டர் சின்னராஜ், முதல் அமைச்சர் கருணாநிதிக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

### சினிமா செய்திகள்

—4-ம் பக்கம்

### சின்னராஜ் பற்றி சத்தியவாணி

சென்னை, மே 11—தி.மு க வில் இருந்து விலகி சத்தியவாணிமுத்து கட்சியில் சேர்ந்துவிட்ட டாக்டர்சின்னராஜ் இன்று மீண்டும் தி. மு- க.வில் சேர்ந்துவிட்டதாகக் கூறப்படுறது.

இதுகுறித்து சத்தியவாணிமுத்துவிடம் கேட்டபோது சின்னராஜ் தி. மு. க.வில் சேர்ந்துவிட்டார் என்பதை என்னால் நம்பமுடியவில்லை, 2 நாட்கள் முன்பு இங்கே நிருபர்களிடம் தன் அறிக்கையைப் படித்தார்.

கருவுற்று இருக்கும் தன் மனைவியைப் பார்த்துவர ஊருக்கு சென்றார். இப்போது அவர் தி.மு.க வில் சேர்ந்து விட்டார் என்றால் அது ஆச்சர்யமாக இருக்கிறது என்றார்

மின்சாரவெட்டிலிருந்து

### சலூனுக்கு சலுகை?

சென்னை, மே 11—முடி திருத்தும் கடைகளுக்கு மின் கட்டுப்பாட்டிலிருந்து விதிவிலக்கு அளிப்பது பற்றி பரிசீலிப்பதாக அமைச்சர் ஓ. பி. இராமன் உறுதியளித்தார்.

இரவு ஏழரை மணிக்குக் கடைகளை மூடிவிட வேண்டும் என்று அரசு உத்தரவிட்டுள்ளது.

இது சம்பந்தமாக எஸ். எஸ். விஸ்வநாத அரசு கூட்டுறவு நாணயச் சங்கம், தமிழக படித்த மருத்துவர் சங்கம் ஆகிய அமைப்புகளின் சார்பில் எஸ். மாரியப்பன், நிருபர் சீனிவாசன் ஆகியோர் மின்சார அமைச்சரிடம் மனு கொடுத்தனர்.

'ஹிப்பி'களின் நாகரிகமற்ற செயலால் சவரக்கடைக்காரர்கள் வருவாய் இழந்து தவிக்கின்றார்கள். அலுவலகங்களுக்குச் சென்று வருபவர்கள் மாலை ஆறு மணிக்குத்தான் கடைக்கு வருகிறார்கள் ஏழரை மணிக்குக் கடைகளை மூடுவதால் சவரத் தொழிலாளர்கள் பாதிப்பு அடைகிறார்கள் என்று நிருபர் சீனிவாசன் அமைச்சரிடம் விளக்கிக் கூறினார்.

ஒரு வாரத்திற்குள் இந்தப் பிரச்சினைப்பற்றிப் பரிசீலித்து ஆவன செய்வதாக அமைச் ஓ பி. இராமன் உறுதி கூறினார்.

தூண்டுதல் ஊர்ஜிதமாகிறது:

# ஜெகஜீவன்ராம்-சத்தியவாணி டெலிபோன் பேச்சு

சென்னை, மே 11—மத்திய அமைச்சர் ஜெகஜீவன்ராமுடன் அமைச்சர் பதவியில் இருந்து நீக்கப்பட்ட சத்தியவாணிமுத்து "டிரங்காலில்" தொடர்பு கொண்டு பேசினார். இந்த தகவலை சத்தியவாணியே வெளியிட்டார்.

இந்தப் பேச்சுவார்த்தை இரு தினங்களுக்கு முன்பு நடந்தது

இருவரும் தொலை பேசியில் நீண்ட நேரம் பேசிக்கொண்டார்கள்.

இம்மாத இறுதியில், தான் துவக்கப்போகும் புதிய கட்சி பற்றியவிவரங்களை ஜெகஜீவன் ராமுக்கு சத்தியவாணிமுத்து விளக்கியதாகத் தெரிகிறது.

கருணாநிதிக்கு எதிராக செயல்பட்டு புதுக் கட்சி துவக்க சத்தியவாணிமுத்துவை ஜெகஜீவன்ராம் தூண்டினார் என்று நேற்று நவமணி செய்தி வெளியிட்டது தெரிந்ததே.

இதை உறுதிப்படுத்தும் வகையில் ஜெகஜீவன்ராம், சத்தியவாணிமுத்து டிரங்கால் பேச்சு நடந்து இருக்கிறது.

ஜெகஜீவன்ராமுடன் டிரங்காலில் தொடர்பு கொண்டு பேசியதை சத்தியவாணி முத்துவே இன்று ஒப்புக்கொண்டார்.

மத்திய அமைச்சர் ஜெகஜிவன்ராமிடம் தொலை பேசி மூலம் தொடர்பு கொண்டு பேசினீர்களா? என்று சத்தியவாணிமுத்துவிடம் கேட்டபோது ஆமாம்; பேசினேன் என்றார்.

இங்கு நடந்த விவரங்களை அவரிடம் கூறினேன். பிரதமரைச் சந்திக்க வேண்டும் என்பதையும் அவரிடம் சொன்னேன். நான் சொன்ன விவரங்களைக் கேட்டுக்கொண்டார்.

எல்லாவற்றையும் விவரமாக எழுதி அனுப்பச் சொன்னார் என்றார்.

கேள்வி: — ஜெகஜீவன் தூண்டுதலாலேயே நீங்கள் தனிக்கட்சி அமைக்கப் போவதாக ஒரு பத்திரிகையில் செய்தி வந்துள்ளதே?

சத்தியவாணிமுத்து:-முன்பு எம். ஜி. ஆர். தூண்டினார் என்று சொன்னார்கள். இப்போது ஜெகஜீவன் ராம் என்கிறார்கள்.

### மறைந்த தொழிலாளிக்கு நிதி உதவி

சென்னை, மே. 11—கார்ப்பரேஷன் தற்காலிக மலேரியா தடுப்பு துறை தொழிலாளி பக்தவத்சலம் கடந்த 1-ம் தேதியன்று காலமானார். இறந்த தொழிலாளியின் குடும்பத்துக்கு சென்னை 12-வது சர்க்கிள் மலேரியா தடுப்புத் துறை தொழிலாளிகள் ரூ. 64நன்கொடை அளித்தனர்.

# சென்னை ரெயிலை கொளுத்த முயற்சி

சென்னை, மே 11—இன்று காலை திருவள்ளூரில் இருந்து புறப்பட்ட ரெயிலை கொளுத்த சிலர் முயற்சித்தனர். போலீசாரும், பொது மக்களும் இந்தச் சதியை முறியடித்தனர்.

இன்று காலை 5-20 மணிக்கு சென்னையை அடுத்த திருவள்ளூரிலிருந்து, சென்னைக்குப் புறப்பட்ட தொழிலாளர் விசேஷ ரெயிலை தீவைக்க சிலர் முயற்சித்தனர்.

கெரசின், எண்ணெயை பஞ்சு கட்டுகளில் ஊற்றி தீ வைக்கமுயன்றபோது, போலீசாரும்பொதுமக்களும் சேர்ந்து அதை முறியடித்தனர்.

வன்முறையாளர்களை பொது மக்கள் விரட்டி அடித்தனர். உடனே வன்முறைக் கும்பல் அந்த ரெயில் வண்டி மீது கல்வீச்சில் ஈடுபட்டது.

அவர்களையும் போலீசார் விரட்டியடித்தனர். அதன் பின் அந்த ரெயில் திருவள்ளூரிலிருந்து 5-50 மணிக்குப் புறப்பட்டு சென்னை வந்து சேர்ந்தது.

ரெயில்வே ஸ்டிரைக்

### மேலும் 30பேர் வேலை நீக்கம்

சென்னை, மே 11—வேலை நிறுத்தத்தை தூண்டியதாகவும், கடமை செய்யத்தவறியதாகவும் நேற் மேலும் 30 ரெயில்வே ஊழியர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டார்கள்.

இத்துடன் ரெயில்வே ஸ்டிரைக் ஆரம்பித்த பிறகு வேலை நீக்கம் செய்யப்பட்ட ரெயில் ஊழியர்களின் எண்ணிக்கை 103ஆக உயர்கிறது

மேற்கண்ட தகவல்களை தென் ரெயில்வே துணை ஜெனரல் மேனேஜர் தேவநாதன் வெளியிட்டார்.

பிரயாணிகள் போக்குவரத்து, சரக்கு ரெயில் போக்குவரத்து ஆகிய இரு துறைகளிலும் நிலைமை மேலும் அபிவிருத்தி அடைந்துள்ளதாக அவர் சொன்னார்.

தென் ரெயில்வே ஜெனரல் மேனேஜர் வி ராமநாதன் பின்னர் நிருபர்களிடம் பேசுகையில் ஓலவக்கோடு, பிரிவு தவிர மற்ற எல்லா பிரிவுகளிலும் வேலை நிறுத்தத்திற்கு முன்புஇருந்தநிலைமைப் படி எல்லா பிரயாணி ரெயில்களையும் விடுவதற்கு தாம் தயாராக உள்ளதாகச் சொன்னார்.

### காமராஜ் சென்னை வந்து சேர்ந்தார்

சென்னை, மே 11—பழைய காங்கிரஸ தலைவர் காமராஜர் டெல்லியில் இருந்துஇன்று விமானம் மூலம் சென்னை திரும்பினார்.

விமான நிலையத்தில் ராஜாராம் நாயுடு, தென்சென்னை காங்கிரஸ தலைவர் மணிவர்மா, பார்த்தசாரதிசெட்டியார், எஸ பி. கந்தசாமி, வெங்கட்ராமன் ஆகியோர் வரவேற்றனர்.

### நடிகர் நாராயண பிள்ளை மறைவு

சென்னை, மே. 11—பழம்பெரும் நடிகரும் சுயமரியாதை திராவிடர் இயக்கங்களில் ஈடுபட்டிருந்தவருமான என். எஸ். நாராயணபிள்ளை மே 9ந் தேதி காலமானார்.

செய்தியறிந்ததும், கலையுலகப் பிரமுகர்களும், தி. மு. கழகத்தவரும் அவரது இல்லத்துக்குச் சென்று மலர்வளையம்வைத்து இறுதி மரியாதை செலுத்தினர்.

நாராயணபிள்ளை மறைவுச் செய்தி கேட்டதும், முதலமைச்சர் கருணாநிதி ஓர் இரங்கல் செய்தியனுப்பி வைத்தார்.

# கடத்தலைத் தடுக்க தமிழ்நாட்டில் கடல் ஓரமாக ரோந்துப் படை

புதுடெல்லி, மே 11—கள்ளக் கடத்தலைத் தடுப்பதற்காகத் தமிழ்நாட்டில் கடற்கரை ஓரமாக விசேஷ ரோந்துப்படை அமைக்கப்படும் என்று மக்கள் சபையில் மத்திய நிதித்துறை ராஜாங்க மந்திரி கே. ஆர். கணேஷ் கூறினர்.

ரோந்துப் படையைச் சேர்ந்தவர்கள் பெரிய துப்பாக்கிகளும் கைத்துப்பாக்கிகளும் வைத்திருப்பர். தவிர, கள்ளக் கடத்தல் படகுகளைத் துரத்திப் பிடிக்க விரைவு படகுகளைப்பெற ஏற்பாடுகள் செய்யம்பட்டுள்ளன. இந்த விரைவுப்படகுகளில் யந்திரத் துப்பாக்கிகள் பொருத்தப் பட்டிருக்கும் என்றும் மந்திரி கே ஆர். கணேஷ் தெரிவித்தார்.

கள்ளக் கடத்தல்காரர்களின் நடமாட்டம் பற்றி ரோந்துப் படையினருக்கு உடனுக்குடன் ரகசியத் தகவல்களைத் தெரிவிப்பதற்கென தமிழ்நாட்டின் கடலோரப் பகுதிகள் நெடுக வயர்லஸ் கருவித் தொடர்பு வசதிகள் ஏற்படுத்தப்படும் என்றும் அவர் கூறினர்.

கள்ளக் கடத்தலைத் தடுக்க தமிழ்நாட்டில் மட்டுமன்றி, கோவையிலும் கடற்கரை ஓரமாக ரோந்துபடையும். வயர்லஸ் தொடர்பு வசதிகளும் ஏற்படுத்தப்படும் என்று மந்திரி சொன்னர்.

### கடத்தல் ரோந்து படை

1972—73ம் ஆண்டில் சுங்க அதிகாரிகள் கைப்பற்றிய கடத்தல் பொருட்களின் மதிப்பு ரூ. 27 கோடியாகும். 1973—74-ம் ஆண்டில் இது ரூ.34 கோடியாக உயர்ந்தது.

### சத்தியவாணி மன்றம் கலைப்பு

சென்னை, மே 11—சென்னை முதல் வட்டத்தில் இருந்து வந்த சத்தியவாணி முத்து நற்பணி மன்றம் கலைக்கப்பட்டது.

மேற்படி மன்றத்தின் உறுப்பினர் கூட்டம் மே 8-ந் தேதி மாலை, தலைவர் கே. ராஜி தலைமையில் நடைபெற்றது. அப்போது கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சத்தியவாணிமுத்து அம்மையார் கட்சியின் கொள்கைக்குப் புறம்பாக நடந்ததை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

#### மன்றம் கலைப்பு

இதுவரை அம்மையார் பெயரில் இயங்கிவந்த இம்மன்றத்தைக் கலைத்துவிட்டு டாக்டர் கலைஞர் முத்தமிழ் மன்றம் என்ற பெயரில் இயங்க மன்ற உறுப்பினர்கள் ஏகமனதாக முடிவு செய்கிறார்கள்.

இவ்வாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### சென்னையில் ராணுவ அதிகாரிகள் பயிற்சி பூர்த்திவிழா

சென்னை, மே 11—சென்னை பறங்கிமலை ராணுவப் பயிற்சிக் கல்லூரியில் மேலும் 342 ராணுவ அதிகாரிகள் பயிற்சியை பூர்த்தி செய்ததைக் குறிக்கும் வகையில் அவர்களுடைய விசேஷ அணிவகுப்பு விழா இன்று காலை நடந்தது. மத்தியபிராந்திய தளபதி கே. கே. சிங் அணிவகுப்பு மரியாதையை ஏற்று அணிவகுப்பை பார்வையிட்டார்.

அணிவகுப்புக்கு தலைமை வகித்த ஆர். வி. எஸ. மான் இந்தக்கல்லூரியில் மிகச் சிறந்த திறமை காட்டியிருப்பதைப் பாராட்டி அவருக்கு வீரவாளை பரிசாக கே. கே. சிங் வழங்கினார். ஜி. எஸ. பால் என்ற வேறொரு ராணுவ அதிகாரி, 2 பதக்கங்களைப் பரிசாகப்பெற்றார். மேலும் 3 ராணுவ அதிகாரிகள் பாராட்டும் பதக்கங்களைப் பெற்றனர்.

# சென்னையில் தி. மு. க. கம்யூனிஸ்டு மோதல்: 3 பேர் படுகாயம்

சென்னை, மே 11—அம்பத்தூரில் கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த 3 தொழிலாளர்கள் தி. மு, க. வினரால் இன்று தாக்கப்பட்டதாகத் தெரிகிறது

கம்யூனிஸ்டு தொழிலாளர்களுக்கும் தி. மு. க. தொழிலாளர்களுக்கும் இடையே நடந்த மோதலில் காயம் அடைந்த இந்த தொழிலாளிகள் அயனாவரம் மருத்துவமனையில் சிகிச்சைக்கு சேர்க்கப்பட்டனர்.

அம்பத்தூரிலுள்ள இந்தியா மீட்டர் தொழிற்சாலையில் மார்க்சிய கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த வி. பி சிந்தன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்து கம்யூனிஸ்டு தொழிலாளர்களைத் திமுக. வினர் தாக்கி வருவதாக தொழிற்சங்கப் பிரமுகர் ஒருவர் தெரிவித்தார்.

தாக்கப்பட்ட தொழிலாளர்களில் ஸ்ரீதரன் தொழிற்சங்க பொருப்பாளர்களில் ஒருவர். சாவித்திரி என்னும் பெண்ணும் தாக்கப்பட்டு இருக்கிறார்.

ஸ்ரீதரன் நிலை கவலைக்கிடமான நிலைமையில் அயனாவரம் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு. சிகிச்சை பெறுகிறார்

# ரெயில் ஸ்டிரைக் தீர்க்க அரசு சமரச திட்டம்: பெர்னாண்டஸ் நிராகரிப்பு

**புதுடெல்லி, மே 11—ரெயில்வே ஊழியர்களின் வேலை நிறுத்தத்தை தீர்க்க மத்திய அரசு வெளியிட்ட 3 அம்ச சமரச திட்டத்தை ரெயில்வே தொழிற் சங்கத் தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் நிராகரித்து விட்டதாக அவர் சார்பாக வெளியான ஒரு அறிக்கை தெரிவித்தது.**

ரெயில்வே வேலை நிறுத்தத்தை தொடர்ந்து நடத்த வேண்டுமென்று ரெயில்வே ஊழியர்களுக்கு போராட்டக் குழு மீண்டும் வேண்டுகோள் விடுத்துள்ளது.

எதிர்க்கட்சி தலைவர்களுடன் பிரதமர் இந்திராகாந்தி நேற்று நடத்திய ஆலோசனையின்போது உருவான 3 அம்ச சமரச திட்டம் பின்வருமாறு:—

(1) கைது செய்யப்பட்ட ரெயில்வே ஊழியர்கள் அனைவரும் விடுதலை செய்யப்பட வேண்டும். (2) அதே சமயத்தில் ரெயில்வே வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட வேண்டும். (3) பின்னர் பேச்சு வார்த்தை நடக்க வேண்டும்.

தற்போது சிறையில் உள்ள பெர்னாண்டஸ் சார்பாக நேற்று ஒரு அறிக்கை வெளியிடப்பட்டது. போனஸ், சமத்துவ சம்பளம் ஆகிய கோரிக்கைகள் ஏற்றுக்கொள்ளப்படாத வரை சமரசம் ஏற்பட முடியாது என்று பெர்னாண்டஸ் தெரிவித்துள்ளதாக அவர் சார்பில் வெளியான அறிக்கையில் கூறப்பட்டிருந்தது.

## போராட்ட குழு அறிவிப்பு

சமரச திட்டம் எதுவும் போராட்டக்குழுவிடம் தெரிவிக்கப்படவில்லை என்றும், சமரச திட்டம்வந்தால் அதை போராட்டக்குழு பரிசீலிக்கும் என்றும் குழுவின் அறிக்கை ஒன்றுதெரிவித்தது.

# விஜி பன்னீர்தாஸ் அமெரிக்கா பயணம்

சென்னை, மே 11—தொழிலதிபர் வி. ஜி. பன்னீர்தாஸ் இன்று அமெரிக்காவிற்குப் பயணமானார்.

இம்மாதம் 27ந்தேதியிலிருந்து 31ந்தேதி வரை கனடாவில் மான்ட்டீரில் நகரில் சர் ஜார்ஜ் வில்லியம்ஸ் பல்கலைக் கழகத்தில் நடைபெறும் அனைத்துலகவீடமைப்புக் கருத்தரங்கில் வி. ஜி. பன்னீர்தாஸ் கலந்து கொள்கிறார்.

ஜூன் 9-ம் தேதி முதல் 11-ந் தேதிவரை நியூயார்க் நியூஜெர்ஸியில் நடைபெறும் அனைத்துலக தவணைமுறை விற்பனையாளர் மாநாட்டிலும் பன்னீர்தாஸ் இந்தியாவின் சார்பாக கலந்து கொண்டு உரையாற்றுகிறார்.

அமெரிக்கத் தவணைமுறை விற்பனையாளர் கூட்டமைப்பான "நேஷனல் அசோஸியேஷன் ஆப் இன்ஸ்ட்டால்மெண்ட் கம்பெனீஸ்" தவணை விற்பனையிலும், மக்கள் சேவையிலும் ஆற்றியுள்ள சிறப்புமிகு பணியினைப் பாராட்டி விருது ஒன்றையும் வி. ஜி. பி. வழங்குகிறார்.

பன்னீர்தாஸ் தமது சுற்றுப் பயணத்தின் தொடக்கமாக பிரான்ஸ் நாட்டில் லூர்து என்ற கிறிஸ்துவத்தலத்திற்கு செல்கிறார். அவருடன் அவரது துணைவியாரும் இளைய சகோதரர் செல்வராஜும், திருமதி செல்வராஜும் செல்கின்றனர்.

# ரெயில்வே ஸ்டிரைக்: துறைமுக தொழிலாளர் கோரிக்கை

சென்னை, மே 11—கைது செய்யப்பட்டுள்ள தொழிற் சங்கத் தலைவர்களை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும் என்று துறைமுகத் தொழிலாளர் (ஏ. ஐ. டி. யூ.சி.) சங்கம் கோரியுள்ளது.

மேற்படி தொழிலாளர் சங்கப் பொதுக்கூட்டம் கடந்த 8ந் தேதி துறைமுகத்திற்குள் நடைபெற்றது. கூட்டத்திற்கு பி. துரை தலைமை வகித்தார்.

ஏ. எஸ். கே, எஸ். தங்கசாமி, பிரடரிக் ஆஜகு, ஆர். பாபுராவ் ஆகியோர் பேசினர்.

இருபது லட்சம் ரெயில்வே தொழிலாளர் போராட்டத்தை உடனே சுமுகமாக முடிக்க, கைது செய்யப்பட்டுள்ள தலைவர்களை உடனே விடுதலை செய்து, மீண்டும் பேச்சுவார்த்தை துவங்க மத்திய அரசு ஆவன செய்ய வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# பாரி கம்பெனி கதவடைப்பு

சென்னை, மே 11—சென்னை பாரி கம்பெனி அலுவலகத்தில் கதவடைப்பு செய்யப்பட்டது.

கடந்தஆண்டு அதிக லாபம் பெற்றிருப்பதாகக் கூறி தொழிலாளர்கள் தங்களுக்கு நியாயமான போனஸ் தேவை என்று கேட்டு வந்தனர். இதற்காக அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டமும் நடத்தினர். ஆர்ப்பாட்டம் நடத்தியதற்காக 45 பேர் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர். இதை எதிர்த்து தொழிலாளர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். இதைஒட்டி கடந்த 8-ம் தேதி முதல் நிர்வாகம் கதவடைப்பு செய்தது.

நியாயமான போனசைப் பெறவும், கதவடைப்பை நீக்கவும் சங்கத் தலைவர் துரை. முருகேசனை அமைப்பாளராகக்கொண்டு கூட்டுப் போராட்டக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் சி. ஐ. டி. பாரி குழுவைச் சேர்ந்த அங்கீகரிக்கப்பட்ட எல்லா யூனியன்களும் பங்கு பெற்றுள்ளன.

# கம்யூனிஸ்டு எம். பி.க்கள் வேண்டுகோள்

சென்னை, மே 11—ரெயில்வே ஊழியர்கள் போராட்டத்தில் சமரசம் செய்து கொள்ளும்படி மத்திய அரசை நிர்ப்பந்திக்குமாறு பொதுமக்களுக்கு எம். பி.க்களான பார்வதி கிருஷ்ணன், எம். கல்யாணசுந்தரம் ஆகியோர் ஒரு வேண்டுகோளை விடுத்துள்ளனர்.

ரெயில்வே ஊழியர் பிரதிநிதிகளுடன் மீண்டும் பேச்சு நடத்தும்படி அரசை நிர்ப்பந்திக்குமாறு எம்.பிக்கள், எம். எல்.ஏ.க்கள், நகரசபைத்தலைவர்கள், ஆகியோரையும் மாணவர் நிறுவனங்கள், பெண்கள் சங்கங்கள் ஆகியவைகளையும் அவர்கள் கேட்டுக்கொண்டனர்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

20வது அகில இந்திய கைத்தறி இரு வாரவிழா கண்காட்சி: கலைஞர் திருநாள் பட்டிமன்றம்: தலைமை—அரு. சங்கர், கலந்து கொள்வோர்: சுகி சிவம், புரபெசர் ராஜகோபால், புலவர் ஆடலரசு, கே. பக்தவத்சலம். மாலை 6-30 மணி. யுனைட்டட் தியேட்டர்சாரின் உனக்காக பிறந்தவள் நாடகம். மாலை 7-30 மணி. பாந்தியன் சாலை, எழும்பூர்.

இந்து மத பாதுகாப்புக் கழகம் ஆண்டு விழா—மூன்றும் நாள். வழிபாடு—சைதை தேவாரம் த. நடராஜன் மாலை 4மணி, ஜோதி நாடார்: அப்பர் சரித்திரம் சொற்பொழிவு, மாலை 5 மணி, திருவள்ளுவ நாயனார்—இன்னிசை—கதை — உமாசரஸ்வதி. மாலை 6 மணி, காரணீஸ்வரர் ஆலயம், சைதை.

111வது வட்ட சேரணி அறிவக திறப்பு விழா; தலைமை: சா. கணேசன், திறப்பாளர்: பி. கே. முத்துராமலிங்கம், சேரணிகொடியேற்றல் ஏ. ரா. நெடுஞ்செழியன் மகளிர் சேரணிதுவக்குபவர்: அலமேலு அப்பாதுரை. காலை 8 மணி.

# லஞ்சம் வாங்கிய போலீஸ் அதிகாரிகள் வேலை நீக்கம்

சென்னை, மே 11—லஞ்சம் வாங்கியதாக போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் டிஸமிஸ் செய்யப்பட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது. இதே போல் 3 தலைமைப் போலீஸ்காரர்கள், 3 போலீஸகாரர்கள் ஆகியோரும் ஊழல் புகார் காரணமாக டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளனர்.

ஒரு போலீஸ்காரர் கட்டாயமாக ஒய்வுபெறும்படி செய்யப்பட்டது.

கூட்டுறவுத் துறை இன்ஸ்பெக்டர் ஒருவர் பதவி இறக்கம் செய்யப்பட்டார்.

கோவை நகராட்சியைச் சேர்ந்த சானிட்டரி இன்ஸ்பெக்டர் ஒருவரின் ஓராண்டு சம்பள உயர்வு குறைக்கப்பட்டது.

இவர்களில் ஒருவரது அப்பீல் அனுமதிக்கப்பட்டு தண்டனை ரத்து செய்யப்பட்டது.

இரண்டு அப்பீல்கள் இன்னும் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை.

அரசாங்கம் வெளியிட்ட பத்திரிகை குறிப்பில் மேற்கண்ட தகவல்கள் கூறப்பட்டுள்ளன.

# அண்ணா தி. மு. க. ஒரு முற்போக்கு கட்சி அல்ல: முருகானந்தம் தாக்கு

**மதுரை, மே 11—அண்ணா தி. மு. க. ஒரு முற்போக்குக் கட்சி அல்ல என்று கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் முருகானந்தம் எம். பி. கூறினார்.**

ரெயில்வே தொழிலாளர்களின் போராட்டத்தை ஆதரித்து அம்பாசமுத்திரத்தில் பொதுக்கூட்டம் நடந்தது. இதில் கலந்துகொண்டு முருகானந்தம் பேசியதாவது;-

இன்று ரெயில்வே தொழிலாளர்கள் போராட்டம் நாடு முழுவதும் நடக்கிறது. இதற்காக அகில இந்தியாவிலும் 8 கட்சிகள் கொண்ட இடதுசாரி முற்போக்கு கூட்டணி அமைத்திருக்கிறோம். அப்படியானால் தமிழகத்தில் உள்ள அ.தி.மு.க.வும் அந்த முற்போக்கு இடதுசாரிக் கட்சி தானா என்று கேட்டுவிடாதீர்கள்.

அ.தி.மு.க.வை பொறுத்த வரை ஜனநாயகக்கட்சிஎன்று வேண்டுமானால் ஒப்புக்கொள்ளலாமே தவிர இடதுசாரி முற்போக்குக் கட்சி என்று ஒருநாளும் ஏற்றுக்கொள்ள முடியாது. இதை தமிழக மக்கள் உணரவேண்டும்.

மேற்கண்டவாறு முருகானந்தம் பேசினார்.

# பி.அண்டுசி. ஆலை ஊழியர்கள் உண்ணாவிரதம்

சென்னை, மே 11—பி. அண்டு சி. மில் ஸ்டாப் யூனியனைச் சேர்ந்த ஊழியர்கள், மில்லின் முன்னால் இன்று ஒரு நாள் உண்ணாவிரதம் இருக்கின்றனர்.

பின்னி நிர்வாகத்தின் கீழிருக்கும் தலைமை நிலையத்தில் பணிபுரியும் ஊழியர்களுக்கு தரப்படுவது போல் தங்களுக்கும் பஞ்சப்படி தர வேண்டும் என்று ஸ்டாப் தொழிலாளர்கள் கோரினர். இதை ஒட்டி இந்த ஊழியர்களுக்கு மட்டும் கடந்த ஒரு மாதமாக நிர்வாகம் கதவடைப்புச் செய்தது.

இந்தப்பிரச்சினை இப்போது தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராம் முன்னிலையில் இருக்கிறது.

பிரச்சினையை விரைவில் தீர்க்க தீவிரபோராட்டத்தில் ஈடுபட தொழிலாளர் விரும்புகின்றனர்.

இதன் முதல் கட்டமாக இன்று ஒரு நாள் அடையாள உண்ணாவிரதம் இருக்கின்றனர்.

## 6 எம். எல். ஏ. விலகல்: கேரள அரசு மெஜாரிடி இழந்தது

# "பதவியில் நீடிக்க மாட்டோம்": கேரள மந்திரி அறிவிப்பு

**கள்ளிக்கோட்டை, மே. 11—"மைனாரிடி அரசாக நாங்கள் பதவியில் நீடிக்க மாட்டோம்" என்று கேரள உள்துறை மந்திரி கருணாகரன் அறிவித்துள்ளார்.**

**கேரளாவில் ஆளும்கட்சி கூட்டணியிலிருந்து 6 எம். எல். ஏ. விலகியுள்ளதால் கேரள அரசு மெஜாரிடி அரசாகிவிட்டதைத் தொடர்ந்து கேரள உள் துறை மந்திரி கருணாகரன் இவ்வாறு கூறினார்.**

கேரள அரசுக்கு அளித்து வந்த ஆதரவை 6 எம்.எல்.ஏ.க்கள் வாபஸ் பெற்றதைத் தொடர்ந்து கேரள சட்டசபையில் கூட்டணி அரசின் பலம் 66 ஆகக் குறைந்துவிட்டது. சபையின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 134.

கேரள கூட்டணி அரசில் வலது கம்யூனிஸ்டு இந்திரா காங்கிரஸ், முஸ்லிம் லீக் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

முஸ்லிம் லீக் கட்சியில் ஏற்பட்டுள்ள கோஷ்டிப் பூசலின் விளைவாக 6 முஸ்லிம் எம். எல். ஏ. க்கள் கூட்டணி அரசுக்கு அளித்து வந்த ஆதரவை வாபஸ் பெற்றுவிட்டனர். சட்டசபையில் தனியே உட்காரப்போவதாக அவர்கள் அறிவித்துள்ளனர்.

## கவிழும் ஆபத்து

கேரள கூட்டணி அரசு இவ்விதம் மெஜாரிடி இழந்து விட்டதால் வலதுகம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த முதல்வர் அச்சுதாமனன் தலைமையிலான மந்திரிசபை கவிழும் ஆபத்து ஏற்பட்டுள்ளது.

மந்திரி சபை தொடர்ந்து பதவியில் நீடிக்குமா அல்லது ராஜினாமா செய்யுமா என்பது பற்றி முதல்வர் அச்சுதமேனன் எதுவும் கூறவில்லை. எனினும் அவர் தனது சக மந்திரிகளுடன் அவசர ஆலோசனையில் ஈடுபட்டுள்ளார்.

அகில இந்திய இந்திரா காங்கிரஸ் கட்சியின் தலைவரான சங்கர் தயாள் சர்மா ஞாயிறன்று எர்ணாகுளம் வருகிறார். மந்திரி சபையில் இந்திரா காங்கிரஸ் நீடிக்க வேண்டுமா என்பது பற்றி ஆலோசனை கூறுவார்.

அடுத்து என்ன செய்வது என்பது பற்றி முடிவு எடுக்க கேரள பிரதேச இந்திரா காங்கிரஸ் கமிட்டியின் அவசரக் கூட்டம் இன்று கொச்சியில் கூடுகிறது.

## நீடிக்கமாட்டோம்

இப்போது ஏற்பட்டுள்ள நெருக்கடி பற்றி உள்துறை மந்திரி கருணாகரன் (புது காங்கிரஸ்) கருத்து கூறுகையில்: "மைனாரிடி அரசாகப் பதவியில் நீடிக்கமாட்டோம்" என்றார்.

"எனினும் அவர் தொடர்ந்து பேசுகையில் "ஆனால் இப்போது அரசு உண்மையில் மைனாரிடி ஆகிவிட்டதா என்பதைப் பார்க்கவேண்டும். பிரிட்டனில் மைனாரிடி ஆட்சி பதவியில் நீடித்து இருக்கவில்லையா" என்றார்.

இதற்கிடையே கேரளஅரசியலில் ஏற்பட்டுள்ள புதிய திருப்பம் பற்றி கேரள கவர்னருக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

கேரள சட்டசபை கூட்டம் இப்போது நடைபெறவில்லை என்பதால் அரசுக்கு உடனடி ஆபத்து இல்லை. 3 எதிர்க் கட்சி எம். எல். ஏ.க்களின் ஆதரவைப் பெறமுடியும் என்று ஆளுங்கட்சி நம்புவதாகக் கூறப்படுகிறது.

ரெயில்வே ஸ்டிரைக்

எதிரொலி :

# பஸ் நிலையத்தில் அமைச்சர் ராமச்சந்திரன்

சென்னை, மே 11—தமிழ்நாடு போக்குவரத்துத் துறை அமைச்சர் எஸ். ராமச்சந்திரன் நேற்றுஅரசுப் பேருந்து நிலையத்திற்குச் சென்று பார்வையிட்டார்.

ரெயில்வே வேலை நிறுத்தத்தின் விளைவாக ஏற்பட்டுள்ள போக்குவரத்து நெரிசலைச் சமாளிக்க, தமிழ்நாடு அரசு போக்குவரத்துத்துறை செய்துள்ள ஏற்பாடுகளை அமைச்சர் நேரில் பார்த்தார்.

அரசுப் போக்குவரத்துத் துறை இயக்குநர் எ.பி.முத்துசாமியும் உடனிருந்தார்.

புதிதாகப் பொறுப்பேற்றுள்ள அரிஜன நலத்துறை அமைச்சர் ராஜாங்கம் தமது அலுவலைத் தொடங்குமுன் முதலமைச்சர் கருணாநிதி அவருக்கு மாலையணிவித்து வாழ்த்துக் கூறினார்.

# ஞாயிற்றுக்கிழமை ஊட்டி ரேசுக்கு டிப்ஸ்

ஊட்டி, மே 11—ஊட்டியில் நாளை ஞாயிற்றுக்கிழமை நடைபெறும் ரேசுக்கு டிப்ஸ் விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**1. வில்லோபண்ட் பிளேட்**
1400 மீட்டர் காலை 10-30மணி

| | | |
|---|---|---|
| 1 | அனதர் டே — ஆஜாத்—3 | 60-00 |
| 2 | பிரின்சஸ தாரா — மஞசே—1 | 55-50 |
| 3 | பாம்பர்ட் மிஸ — கிருபால் சிங்—2 | 54-50 |
| 4 | பெல்சிமா — கரன்சிங்—4 | 51-00 |
| 5 | கிரேட் டிவைன் — அரவிந்தா—5 | 52-00 |
| 6 | கீ கீ — மஞசே—2 | 47-50 |
| 7 | பிரின்ஸ விஜயா — நாதுசிங்—7 | 47-50 |

டிப்ஸ் :
1. அனதர் டே
2. பெல்லிசிமா

**2. திண்டுக்கல் பிளேட்**
1300 மீட்டர் 11-5 மணி

| | | |
|---|---|---|
| 1 | கூராத் — பிரிசன்—3 | 6 -00 |
| 2 | ஹோம்பிரே — பி. உட்ஸ்—1 | 58-50 |
| 3 | பெட்டர்பாய் — மஞசே—2 | 53-50 |
| 4 | பேடாக் பிரைட் — ஆஜாத்—4 | 52-50 |

டிப்ஸ்:
1 பேடாக் பிரைட்
2 பெட்டர்பாய்

**3. மயிலம் பிளேட் டிவி-1**
1500 மீட்டர் 11 40மணி

| | | |
|---|---|---|
| 1 | குவிக் சி[illegible]ர் — தாரிவால்—7 | 61-00 |
| 2 | பிளேயிங் ஸபிளெண்டர் — சுகுமார்—2 | 59-00 |
| 3 | ராயல்ஜஸ்டிஸ — கிருபால்சிங்—3 | 56-50 |
| 4 | அனகாரா — ஆஜாத்—6 | 56-00 |
| 5 | சமத்கார் — பிகாடோ—5 | 54-00 |
| 6 | ராம்திலக் — பி. உட்ஸ—4 | 49-50 |
| 7 | பீலே — சுதம்—1 | 45-50 |

டிப்ஸ்:
1 அனகாரா
2 பிளேயிங் ஸ்பிளெண்டர்

**4. லவ்டேல் பிளேட்**
1400 மீட்டர் 12-15 மணி

| | | |
|---|---|---|
| 1 | மார்க் ஓவர் — பிரிசன்—3 | 60-00 |
| 2 | அஜீம் — பி. உட்ஸ—2 | 50-00 |
| 3 | சர்லான்ஸலாட் — கிருபால் சிங்—1 | 49-60 |
| 4 | ஒ மை-மை — ஆஜாத்—4 | 48-50 |

டிப்ஸ்:
1 சர்லான்ஸ்லாட்
2 அஜீம்

**5 மயிலம் பிளேட் டிவி 2**
1500 மீட்டர் 12-50 மணி

| | | |
|---|---|---|
| 1 | சன் ஸ்டார் — பி. உ[illegible]ஸ்—6 | 60-00 |
| 2 | சுந்தர் [illegible]ஸ — பிகா[illegible]டோ—3 | 59-00 |
| 3 | இசடோரா — சுகுமார்—1 | 58-50 |
| 4 | பார்த்தீனன் — பெரிஸ—[illegible] | 56-00 |

டிப்ஸ் :
1 சுந்தர் பன்ஸ
2 பார்த்தீனன்

எதிர்பாராத வெற்றி — ஒ ஒ

ஜாக்பாட்:
1. 2, 3, 4, 5-வது பந்தயங்கள்

டிரெபிள்:
3, 4, 5-வது பந்தயங்கள்

நிச்சய வெற்றி
பேடாக் பிரைட்

# விசேஷ மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்ட போலீஸ் அதிகாரிகள்

**சென்னை, மே 11—சென்னையில் உள்ள ஐந்து உயர்தர போலீஸ் அதிகாரிகள் விசேஷ மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்டுள்ளனர்.**

ஒருமாத காலத்துக்கு இவர்கள் விசேஷ மாஜிஸ்திரேட்டுகளாக பொறுப்பு வகிப்பார்கள். இதற்கான உத்தரவை தமிழ்நாடு கவர்னர் கே. கே. ஷா பிறப்பித்துள்ளார்.

விசேஷ மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்டுள்ள போலீஸ் அதிகாரிகள் விவரம் :—

ஆர். காளியப்பன், துணைப் போலீஸ் கமிஷனர் (தலைமை அலுவலகம்) வி. ஜி. மனோகரன், துணைக் கமிஷனர் (சட்டம் - ஒழுங்கு) தெற்குப் பகுதி, பி. துரை, துணைக் கமிஷனர், (சட்டம் ஒழுங்கு) வடக்குப் பகுதி, [illegible]. நாராயணசாமி, துணைக் கமிஷனர் (குற்றப் பிரிவு) கே. பாஸ்கரா துணைக் கமிஷனர், (போக்குவரத்து)

## ரெயில்வே ஸ்டிரைக்:

# கருணாநிதி கருத்து

## 'மத்திய அரசு இரண்டுபடி இறங்கி வரவேண்டும்'

**திருச்சி, மே 11—தமிழகத்தில் விவசாயிகள் போராட்டம் நடைபெற்றபோது, சிறையிலிருந்து தலைவர்களை விடுதலை செய்து தமிழக அரசு பேச்சுவார்த்தை நடத்தியது அல்லவா?**

**அதேபோல, ரெயில்வே ஸ்டிரைக் பிரச்னையையும் சரியான முறையில் அணுக, "மத்திய அரசும் தொழிலாளர் தலைவர்களும் இரண்டுபடி இறங்கிவர வேண்டும்" என்று முதல் அமைச்சர் கருணாநிதி யோசனை கூறினார்.**



திருச்சி மாவட்டம் பெரம்பலூரில் தி.மு.கழகப்பொதுக் கூட்டம் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் அமைச்சர் அன்பில் தர்மலிங்கம், து. ப. அழகமுத்து எம்.எல்,ஏ.,ஜே. எஸ். இராசு எம். எல். ஏ., திருச்சிமாவட்ட தி.மு.கழகச் செயலாளர் எம். எஸ். வெங்கடாசலம், அ.தி. மு. க.விலிருந்து விலகி தி. மு. கழகத்தில் சேர்ந்த முசிறி மாசிலாமணி ஆகியோர் பேசினர்.

இக்கூட்டத்தில் முதல்வர் கருணாநிதி பேசும்போது கூறியதாவது:-

இன்று இந்திய நாடு, ரெயில்வே போராட்டத்தின் விளைவாக மிகவும் நெருக்கடி நிலையிலிருக்கிறது. அகில இந்திய வானொலியில் ரெயில்களெல்லாம் ஓடிக்கொண்டிருப்பதாகக் கூறுகிறார்கள். வானொலியை எப்போது திருப்பினாலும் ரெயில்கள் ஓடிக் கொண்டிருப்பதாகச் சந்தேகம் ஏற்படும்படி அடிக்கடி சொல்கிறார்கள்.

இந்த ரெயில்வே வேலை நிறுத்தம் தேவைதானா? அவசியம்தானா? நடைபெறலாமா? என்றெல்லாம் நான் கேட்கவில்லை.

ரெயில்வே தொழிலாளர்களின் கோரிக்கைகள் பற்றிய பேச்சுவார்த்தை டில்லியில் நடந்தது. அப்போது பிரதமர் இந்திரா வெளிநாடு சென்றிருந்தார்.

மத்திய ரெயில்வே அமைச்சரும் ஜார்ஜ் பெர்னாண்டசும் பேச்சு வார்த்தைநடத்தினர். இதற்கிடையில் பெர்னாண்டஸ் கைது செய்யப்பட்டார். இதனால், 8ம்தேதி நடைபெற வேண்டிய வேலைநிறுத்தம் 3-ம் தேதியே நடைபெறலாயிற்று.

### ரெயிலை நம்பிய ஏழைகள்

இதன் விளைவாகத் திருமணங்களுக்குச் செல்ல வேண்டியவர்கள் செல்ல முடியவில்லை. மிக நெருங்கிய சொந்தக்காரர்கள் இழப்புகளை விசாரிக்க முடியாமல்—அனுதாபம் தெரிவிக்க முடியாமல் தொல்லையுற்றனர்.

வசதி படைத்தவர்களானால் விமானத்தில் செல்லலாம். ஆனால் சாதாரண ஏழை எளியமக்கள், ரெயிலைத்தான் மிகவும் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். குறிப்பாகக் குடும்பம் குடும்பமாகச் செல்ல வேண்டியிருப்பவர்கள் செல்ல முடியாமல் தவிக்கிறார்கள்.

இவைகளெல்லாம் கண்ணுக்குத் தெரிந்த அசௌகரியங்கள்; கண்ணுக்குத் தெரியாத அளவிற்குப் பொருளாதார நெருக்கடிகள் பல இருக்கின்றன. தொழிலாளர்கள் வேலைக்குச் செல்லாததாலும், செல்லுகின்ற ரெயில்களும் சரியாக ஓடாததாலும் விளைபொருள்கள் வெற்றிடங்களுக்குச் செல்ல முடியவில்லை; அது மட்டுமல்ல - நிலக்கரி தமிழ்நாட்டுக்கு வர இயலவில்லை.

### இமயம் முதல் குமரி வரை

இப்படி பொருளாதார ஸ்தம்பிப்பு ஏற்பட்டுள்ளது. இமய முதல் குமரிவரை, இவ்வாறு பெரியதொரு பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க வேண்டியதொரு இக்கட்டான நிலையில் இந்தப் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது.

தொழிலாளர்கள்கோரிக்கை நியாயமா, அல்லவா, அவற்றில் எவை எவற்றை நிறைவேற்றலாம் என்பது பற்றிப் பேச நான் இங்கு வரவில்லை.

மத்திய அரசு இதை ஒரு அகில இந்தியப் பிரச்னையாக கருதுகிறது. இதைப் பேச்சுவார்த்தைகளின் மூலம் ஏன் தீர்த்துவைக்கக்கூடாது?

மாநில அரசுகளும் இது போன்ற கிளர்ச்சிகளைச் சந்திக்கவேண்டியிருக்கிறது. சில மாதங்களுக்கு முன் தமிழகத்தின் விவசாயப் பம்பு செட்டுகளுக்குப் பயன்படுத்தப்படும் மின்விசைக்கு யூனிட்டுக்கு ஒரு காசு வீதம் உயர்த்தினோம். அதன்மூலம் நட்டத்தை ஈடுசெய்ய எண்ணினோம். எதிர்க் கட்சியினர் எதிர்த்தனர்.

### சிம்சன் பிரச்னை

சென்னையில் சிம்சன் போராட்டம் நடைபெற்றது. அத்தப் போராட்டங்களெல்லாம் நடந்தபோது மத்திய அரசு எப்படி நடந்துகொண்டது? அகில இந்திய வானொலியில் அது திருச்சி நிலையமானாலும், சென்னை நிலையமானாலும் காலை முதல் இரவு வரை ஒலிபரப்பிய எந்த நிகழ்ச்சியானாலும் அவற்றில் என்னென்ன [...]னர்கள் என்பதை எண்ணிப்பாருங்கள்.

இப்போது தொழிலாளர்கள் தவறு செய்வதாகச் சொல்கிறார்கள். கவிஞர்களை அழைத்துக் கவிபாடச் சொல்லுகிறார்கள்; பொதுமக்களை, வியாபாரிகளைப் பேட்டி கண்டு வெளியிடுகிறார்கள்.

இவ்வளவும் ரெயில்வே தொழிலாளர்களுக்கும், வேலை நிறுத்தத்திற்கும் எதிராகவே.

### வானொலிமீது கடும் தாக்கு

மத்திய அரசு பாதிக்கப்பட்டால் இப்படியெல்லாம் செய்கிறார்களே, அதே நேரத்தில் விவசாயிகள் போராட்டம் நடைபெற்றபோதும், சிம்சன் போராட்டம் நடைபெற்றபோதும் இந்த வானொலி எங்கே போனது?

தொழிலாளர்கள் தவறு செய்வதாக இன்று உபதேசிக்கிறவர்கள் அன்று ஏன் சொல்லவில்லை. வானொலி ஏன் வாய்மூடிக்கிடந்தது?

கிராமங்களிலே ஒன்று சொல்லுவார்கள் — தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தான் தெரியும் என்று. அந்த வகையில் வானொலி மூலமும் பத்திரிகைகளின் மூலமும், கவிஞர்களை அழைத்து வைத்து இப்போது உபதேசம் செய்து வருகிறவர்கள் இவ்வளவு அக்கறை காட்டுகிறவர்கள் மாநில அரசு இப்படிப்பட்ட சங்கடங்களுக்கு ஆளாகிறபோது இந்த அனைத்திந்திய வானொலியினர் என்ன செய்தார்கள்? மத்திய அமைச்சர்கள் என்ன செய்தார்கள்? சி. சுப்பிரமணியமும், மறைந்த மோகன் குமாரமங்கலமும் என்ன செய்தார்கள்;

### 'ஒருகை பார்க்கலாம்'

'தொழிலாளர்களே! மாநில அரசை ஒருகை பார்க்கலாம்; போராடுங்கள், உங்களுக்குப் பக்கபலமாக நாங்களிருக்கிறோம்' என்று தூண்டிவிட்டார்கள்.

அப்படி [...]ங்கள் தொழிலாளர்களைத் [...]ண்டிவிடவில்லை. வன்முறையில் யார் ஈடுபட்டாலும், அவர்கள் தி.மு.க. வானாலும், கம்யூனிஸ்ட் ஆனாலும், சோஷலிஸ்ட்டானாலும் அவர்களின் மீது சட்டப்படி நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

இது எங்கள் பெருந்தன்மைக்கும், நாட்டுப்பற்றுக்கும் அடையாளம்.

விவசாயிகள் கிளர்ச்சிநடைபெற்றுக்கொண்டிருந்தநேரத்தில் பிரதமர் இந்திரா என்ன சொன்னார்.

### 'மத்திய அரசின் அணுகுமுறை சரியில்லை'

விவசாயிகளின் கோரிக்கைகள் விஷயத்தில் தி. மு. கழகத்தின் அணுகுமுறை சரியல்ல என்று சொன்னாரா இல்லையா? அதையே நான் இப்போது திருப்பிச்சொல்லலாம்—ரெயில்வே தொழிலாளர் பிரச்னையில் மத்திய அரசின் அணுகுமுறை சரியல்ல என்று.

ஆனால் நான் அப்படிச் சொல்லமாட்டேன்.

இப்படியெல்லாம் மத்திய மாநில மோ[...]ல் ஏற்பட நா[...] விரும்பவில்லை.

ரெயில்வே தொழிலாளர்களின் பிரச்னைகளைப் பேசித் தீர்க்குமாறு நான் பிரதமருக்குத் தந்தியடித்தேன். நாடாளுமன்றத்தில் செழியன், மாநிலங்களவையில் டி.கே. சீனிவாசன் ஆகியோர் இதுகுறித்து எடுத்துரைத்தனர்.

சிறையிலுள்ள தலைவர்கள் கூட பேசத் தயார் என்கிறார்கள்; பேச்சுவார்த்தைகள் நடத்தவேண்டும்.

தமிழகத்தில் விவசாயிகள் போராட்டம் நடைபெற்ற நேரத்தில் ப. சு. சின்னதுரை எனக்கொரு தந்தி கொடுத்தார். பிடித்துவைத்திருப்பவர்களை விட்டுவிட்டால். நாங்கள் சென்னைக்கே வந்து பேச்சுவார்த்தை நடத்தத் தயார் என்று அவர் அதில் குறிப்பிட்டிருந்தார்.

அந்தப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றிருந்த 14 பேரையும் விடுதலைசெய்து பேச்சு வார்த்தை நடத்தினோமா இல்லையா?

மத்திய அரசும் தொழிலாளர் தலைவர்களும் இரண்டு படிகள் இறங்கிவரவேண்டும்.

இருதரப்பாரும் கை கோர்த்து, பிரச்னைகளுக்குத் தீர்வு காணவேண்டும் என்று கழகத்தின் சார்பில் வேண்டுகோள் விடுக்கிறேன்.

— இவ்வாறு முதல்வர் கருணாநிதி பேசினார்.



ரெயில்வே வேலை நிறுத்தத்தினால் பாதிக்கப்பட்டிருக்கும் பிரயாணிகளின் வசதிக்காக எல்லா அரசாங்கப் போக்குவரத்து கழகங்களும் அதிகமான பஸ்களை விட ஏற்பாடு செய்துள்ளன.

# ரெயில்வே ஸ்டிரைக் வெற்றி என்று கூறலாமா?

# எம்.ஜி.ஆர் கடும் கண்டனம்

**சென்னை, மே 11—ரெயில்வே வேலை நிறுத்தம் வெற்றி என்றோ தோல்வி என்றோ யாரும் சொல்லக்கூடாது என்று எம்.ஜி.ஆர். கருத்து தெரிவித்துள்ளார்.**

ரயில்வே வேலைநிறுத்தம் சம்பந்தமாக இதுவரை கருத்து தெரிவிக்காத எம் ஜி. ஆர். இப்போது அறிக்கை ஒன்றை வெளியிட்டுள்ளார். அதில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

தபால்தந்தி தொழிலாளர்களாகட்டும்ரெயில்வேதொழிலாளர்களாகட்டும் இவர்கள் எல்லாம் யார்? பொதுமக்கள் தான்.

ஆனால் எந்த போராட்டமானாலும் அத்தனை தொழிலாளர்களும் ஒன்று சேர்ந்து போராடுவது இல்லை.

ரெயில்வே தொழிலாளர்கள் எண்ணிக்கை 20 லட்சம் என்றால் அவர்களை நம்பியிருக்கும் குடும்பத்தினரின் எண்ணிக்கை என்ன என்பதையும் பார்த்தால் அந்த குடும்பங்களையும் சேர்ந்த மக்களுக்காகத்தான் அவர்கள் நடவடிக்கைஎடுக்கிறார்கள் என்று பொருள்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் ரெயில்வே தொழிலாளர்களுக்கு ஆதரவாகவும் எதிர்ப்பாகவும் வேறு சங்கங்கள் பெயரால் அறிக்கைகள் வந்து கொண்டே இருந்தால் இதன் முடிவு என்ன?

ஒருபுறம் முக்கியமான பொருள்கள் போய்ச் சேரவில்லை என்றால் தொழிலாளர்கள் மீது தவறான எண்ணம் உருவாக்க மிகப் பெரிய முயற்சிகள் செய்யப்படுகின்றன.

மற்றொருபுறம் எல்லா தொழிலாளர்களும் ஒன்று சேர்ந்துவிட்டார்களா என்றால் அதுவும் இல்லை.

### தி.மு.க. மீது தாக்கு

தமிழக ஆளும் கட்சி இரு தலைப் போக்கைக் கடைப்பிடித்து மக்களை குழப்பத்தில் ஆழ்த்துகிறது.

தமிழக ஆளும் கட்சியின் கீழ் இருக்கும்சங்கங்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளன.

அதே சங்கங்களை தங்கள் கட்சியின் அமைப்பில் ஏற்றுக்கொண்டிருக்கிறதமிழக ஆட்சி தனது உறுப்பினர்களைவேலைக்குப் போகாதீர்கள் என்று சொல்லிவிட்டு அப்படி [...]லை நிறுத்தத்தில் ஈடுபடுகிறவர்களைக் கைது செய்கிறது.

தமிழக ஆளும் கட்சி தனது [...]சி உறுப்பினர்களைவேலைக்கு போகாதே என்று உத்தரவு போடத்தயாரா?

மக்களுக்கு இதுபற்றி அவர்கள் உடனடியாக பதில் சொல்லியாகவேண்டும்.

ரெயில்வே தொழிலாளர்களை விசுவாச ஊழியர்கள் விசுவாசமற்ற ஊழியர்கள் [...]ன்று பிளவுபடுத்துவதை அனைவரும்விட்டுவிட்டு நாட்டு நலனுக்கு எல்லா தொழிலாளர்களும் தேவை என்ற உணர்வைக் கொள்ளவேண்டும்.

### வெற்றியா? தோல்வியா?

வேலை நிறுத்தம் வெற்றி என்று தொழிலாளர்களை உற்

4-ம் பத்தி பார்க்க

5-ம் பத்தி தொடர்ச்சி

சாகப்படுத்தவும் தோல்வி என்று கூறி வேலைநிறுத்த எதிர்ப்பாளர்களை ஊக்குவிக்கவும் செய்திகள் வெளிவருவது நல்லதல்ல. ஏன் என்றால் நாட்டின் பொருளாதார தொழில் வளர்ச்சி போக்குவரத்து தொடர்பு மக்கள் நலன் இவற்றை பணயம் வைத்து ஒரு மோதல் நடைபெறக்கூடாது.

மக்களின் வெறுப்புக்கு ஆட்சியில் இ[...]ப்பவர் ஆளாகவேண்டும் என்ற ஒரு குறிக்கோளையே தொழிலாளர் தலைவர்கள் லட்சியமாக கொள்ளக்கூடாது.

தொழிலாளர்களை வேறுபடுத்தி தங்களது பலத்தை பயன்படுத்தி தொழிலாளர்கள் போராட்டம் நடத்தவே அச்சப்படும் சூழ்நிலை உருவாக்கினால் இதில் இருதரப்பாரும் தோல்வி அடைவார்கள்.

இதில் யார் தவறு செய்தாலும் எதிர்கால அரசியலில் தவறான வழியில் செயல்பட்டு அழிவு சக்தியின் வலிமை தான் அதிகரிக்கும்.

இப்படி ஏற்படுவது தொழிலாளர்களின் போராட்டத்துக்கு மட்டுமின்றி நாட்டின் ஜனநாயக வளர்ச்சிக்கும் ஏற்றதல்ல.

இவ்வாறு அ. தி. மு. க. பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

# ஒரே இரவில் ஓட்டலில் 57 அழகிகள் கைது: போலீஸ்சுற்றிவளைத்தது

**பாண்டிச்சேரி, மே. 11—ஒரே இரவில் ஓட்டல்களில் திடீர் சோதனை நடத்தி பாண்டிச்சேரியில் 57 அழகிகளைப் போலீசார் வளைத்துப் பிடித்துக் கைது செய்தனா.**

பாண்டிச்சேரி மாநில தலைமை போலீஸ் அதிகாரி (ஐ. ஜி.) மி[...]ல் குமார் இந்த தகவலை தெரிவித்தார். இது பற்றி அவர் நிருபர்களிடம் கூறியதாவது;—

பாண்டிச்சேரியில் பல ஓட்டல்களில் பெண்களை தவறான வழியில் ஈடுபடுத்துவதாக போலீசுக்கு தகவல் வந்தது. இதையொட்டி பாண்டிச்சேரியில் உள்ள ஓட்டல்களில் போலீசார் திடீரென்று சோதனை நடத்தினார்கள்.

ஒரே நாள் இரவில் மட்டும் 57 அழகிகள் விபசார தடுப்பு சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டனர்.

### ஓட்டல் அதிபர்களுக்கு எச்சரிக்கை

கடந்த ஒரு ஆண்டில் மட்டும் பாண்டிச்சேரியில் விபசார தடுப்பு சட்டத்தின் கீழ் 530 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

விபசாரம் நடத்துவதற்காக ஓட்டல் அறைகளை வாடகைக்கு கொடுத்தால் ஓட்டல் உரிமையாளர்கள்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்.

மேற்கண்டவாறு [...]இல் குமார் கூறினார்.

### சென்னை அழகி கடத்தல்

சென்னை வடபழனியைச் சேர்ந்த 27 வயதுள்ள ஒரு பெண்ணை 2 பேர் சேர்ந்து பாண்டிச்சேரிக்கு கடத்திச் சென்று ஓட்டலில் விபசாரத்தில் ஈடுபடுத்த முயற்சித்தார்களாம். அவள் அவர்களிடம் இருந்து தப்பிச் சென்று பெரிய கடை போலீசில் புகார் செய்தாள்.

போலீசார் இதுபற்றி வழக்கு பதிவு செய்து பிச்சமாமணி என்பவரை கைது செய்தார்கள். வழக்கு முடியும் வரை காரைக்காலில் தங்கியிருக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் அவரை பாண்டிச்சேரி தற்காலிக தலைமை மாஜிஸ்ட்ரேட் ஜாமீனில் விடுதலை செய்தார்.

### நீர் மட்டம்

சென்னை, மே 4—

| | |
|---|---|
| மேட்டூர் | 5·36மீட்டர் |
| பெரியாறு | 2·45 „ |
| வைகை | 17·71 „ |
| பாபநாசம் | 21·61 „ |
| கிருஷ்ணகிரி | 9·89 „ |
| [...]த்தனூர் | 22·13 „ |
| மணிமுத்தாறு | 26·28 „ |

# ஊழல் புகார்: விசாரிக்க நீதிபதி நியமனம்

சென்னை, மே 11—பொது வாழ்வில் உள்ளவர்கள் மீது கூறப்படும் புகார்களை விசாரிக்க, [...]மிழக அரசு நீதிபதி ஒருவரை நியமித்திருக்கிறது.

இதற்கு வகை செய்யும் மசோதா ஏற்கனவே தமிழக சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்டிருந்தது.

விசாரணை நடத்தும் நீதிபதியாக, ஓய்வுபெற்ற நீதிபதி டி. வெங்கடாத்திரி நியமிக்கப்பட்டிருக்கிறார்.

சென்னை, ஐகோர்ட் தலைமை நீதிபதி செய்த சிபாரிசின்பேரில் இவர் நியமிக்கப்பட்டிருப்பதாக, கவர்னரின் அறிக்கை ஒன்று கூறுகிறது.



'உங்கள் விருப்பம்' படத்தில் ஜெய்சங்கர், ஜெயசித்ரா.

# 'அம்மா சாகும்போது சொன்ன தென்ன?' சிவாஜி கூறுகிறார்

காரிருளைக் கிழித்துக் கொண்டு சென்னையை நோக்கி வேகமாகச் சென்றுகொண்டிருக்கும் லாரியில் டிரைவர் ராஜுவும், கிளீனர் வேணுவும் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டே செல்கின்றனர். உளுந்தூர்பேட்டை வருகிறது. வயிற்றுப்பசி வண்டியை நிறுத்தச்சொல்கிறது. வழக்கமாகச் சாப்பிடும் டீக்கடை முன்பு லாரி நிற்கிறது.

உள்ளே சென்றதும், ராஜுவுக்கு ஒரு ஸ்பெஷல் டீயும், கிளீனருக்கு தட்டு நிறைய இட்லியும் தோசையும் கொண்டு வருகிறார் சர்வர்.

அருகே உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்த இன்னொரு லாரியின் டிரைவர் ராஜுவைப் பார்த்து, "என்ன ராஜு, லாங் ட்ரிப்லே வர்றே, இப்படி வெறும் டீயைக் குடிச்சே காலத்தைத் தள்ளுறியே; யாருக்காக அப்படி வயித்துக் கட்டி சாப்பிடாமே காசு சேக்கிறே" என்கிறான்.

உடனே ராஜு, தன் நெஞ்சிலுள்ளதை அள்ளிக் கொட்டுகிறான்.

விளக்கைச் சுத்தி வெளிச்சம். ஆனால் அதன் அடியிலே இருட்டு. அதேமாதிரி எங்கப்பா விளக்கு. நான் அடியிலே படிஞ்ச இருட்டு. அவர் ஸ்கூல் ஹெட்மாஸ்டர். நானோ சின்ன வயசிலே உங்க பாட்ச்சோட சேர்ந்ததினலே இப்போ பாட்ஜ் மாட்டிக்கிட்டு டிரைவராயிட்டவன்.

எங்கம்மா சாகும்போது தம்பியை என் கையில் ஒப்படைச்சு 'உன் அப்பாவைப் போல இவனைக் கொண்டு வந்திடுன்னு' சொல்லிட்டு உயிரை விட்டுட்டாங்க. என் தம்பி இப்போ கடைசி வருஷம் இஞ்சினீயரிங் படிக்கிறான். அவன் ஊருக்கு ஒசத்தியா முதல் வகுப்பு வாங்கணும். பெரிய வேலைக்குப் போகனும். நிறைய சம்பாதிக்கணும். அதுதான் நான் ஆண்டவனை வேண்டுவது. த[illegible] அரைப் பட்டினியாக இ[illegible]பதற்கான காரணத்தை விளக்குகிறான்.

இக்காட்சி பிராஸ்பரிடி பிக்சர்ஸ் 'கிரஹப்பிரவேசம்' வண்ணப் படத்திற்காகப் பிரசாத் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

இதில் டிரைவர் ராஜுவாக சிவாஜி கணேசனும், க்ளீனராக எம். ஆர். ஆர். வாசுவும் சக டிரைவராக கே. கே. சௌந்தரும் நடித்தனர். மற்றும் கே. ஆர். விஜயா, சிவகுமார் ஆகியோரும் நடிக்கிறார்கள்.

டி. யோகானந்த் டைரக்ஷனில் வளரும் இப் படத்தின் கதையை நன்னு எழுத வியட்னும் வீடு சுந்தரம் வசனங்களை எழுதுகிறார். கவிஞர் கண்ணதாசன் பாடல்களுக்கு மெல்லிசை மன்னர் விசுவநாதன் இசையமைக்கிறார்.

## கொள்ளைக் கூட்டம் சந்திரகலாவை கடத்தியது

சந்திரகலா தேயிலை தோட்டத்தில் வேலை பார்க்கிறார். அவரது குழந்தையை நாய் ஒன்று காவல் காத்துவந்தது. ஒருநாள் சந்திரகலா வேலை முடித்து வர அதிக நேரமாகிவிட்டது. குழந்தை பசியால் மிகவும் வாடியது. அதனால் ஜுரம் ஏற்பட்டது. சந்திரகலா குழந்தையை டாக்டரிடம் கொண்டுபோய் காட்டினர்.

பின்னர், வீட்டிற்கு குழந்தையைக் கொண்டுவந்து, கட்டிலில் படுக்கவைத்து, மருந்து கொடுக்க மருந்து பாட்டிலைத் திறந்தார். அப்போது திடீரென ஒரு கொள்ளைக் கூட்டத்தினர் சந்திரகலாவைக் கடத்திச் சென்றனர்.

பின்பு கொள்ளைக் கூட்டத்தினரிடமிருந்து சந்திரகலா தப்பித்து வந்து, குழந்தையை[illegible]ார்த்தபோது, குழந்தை மரணம் அடைந்திருப்பதைக் கண்டு அதிர்ச்சி அடைந்து கதறினர். இந்த சம்பவம் எல்லோரின் மனதையும் உருக்குவதாக இருந்தது.

இப்படியொரு காட்சி

6-ம் பக்கத் தொடர்ச்சி

தந்தைக்குச்செய்தியாவும்தெரிகிறது. அனைதை விடுதியில் இருந்த தனது பேரக் குழந்தையை அழைத்து வருகிறார். இந்து கிருஸ்தவர் என்ற மத வேறுபாடு பார்க்கக் கூடாது 'இந்தியன்' என்ற எண்ணம் வேண்டும் என்று பிரிந்த காதலர்களை ஒன்று சேர்த்து வைக்கிறார்.

— இதுதான் கதை

முதன்முறையாக மலையாளப் படத்தில் நடிக்கிறார் லட்சுமி. சட்டைக்காரி பாத்திரத்தில் அவரது நடிப்பும் முதல்தரமாக இருக்கிறது. காதல் காட்சிகளில் மோகனுடன்படு நெருக்கமாகநடித்திருக்கிறார். மோகனுக்கு சரியான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது — நன்றாக அனுபவித்து நடித்திருக்கிறார். அடூர்பாசி, சுகுமாரி, வினோதினி சங்காரடி, சுஜாதா, பகதூர் ஆகியோர் நன்கு நடித்துள்ளனர்.

சேதுமாதவன் அருமையாக டைரக்ட் செய்துள்ளார். எம். ஓ. ஜோசப் தயாரித்திருக்கிறார்.

பிலிம்ஸ் இண்டர் நேஷனல் தயாரித்துவரும் 'கொள்ளைக்காரன்' படத்திற்காக படமாக்கப்பட்டுள்ளது.

இப்படத்தில் வெண்ணிற ஆடை நிர்மலா, ஜோதிலட்சுமி, சந்திரகலா, அஞ்சலிதேவி, ஆலம், கிருஷ்ணா மற்றும் பலர் நடித்துள்ளனர்.

மதுரை வி.கே. பத்மநாபன் வசனம் எழுத, விஜய் டைரக்ட் செய்துள்ளார். தயாரிப்பு கே.வி.பவதாஸ்.

"பெண்ணைப் பிறந்தால்" இப்படி இராக்கி செய்தாரா? என்கிறார் — விஜயசந்திரிகா விடம் சுருளிராஜன்.

'அன்னைத் தேடி' படத்தில் சிவாஜி கணேசன்

## சென்னையில் குழந்தைகள் திரைப்பட விழா

இந்திய அரசின் செய்தி ஒலிபரப்புத் துறையினரும் குழந்தைகள் திரைப்படக் கழகம் என்ற சுயேச்சை நிறுவனத்தினரும் இணைந்து, இம்மாதம் குழந்தைகள் திரைப்பட விழா நடத்த இருக்கின்றனர்.

சென்னை, பம்பாய், டெல்லி, பெங்களூர், ஆகிய நகரங்களில் இந்த விழா நடைபெறும் சென்னையில், மே 17ந் தேதி தொடங்கி, மே 23ந் தேதி முடிகிறது. 21க்கு மேற்பட்ட நாடுகள், இதில் பங்கு கொள்கின்றன. அந்தந்த நாடுகளில் குழந்தைகளுக்கென தயாரிக்கப்பட்ட சிறந்த படங்கள் திரையிடப்படும். இந்த விழாவில் குழந்தைகளுடன் பெரியவர்களும் கலந்துகொண்டு பல்வேறு நாட்டுப் படங்களை கண்டு களிக்கலாம்.

சென்னை கலைவாணர் அரங்கிலும், மகாராணி டாக்கீஸிலும் மேற்சொன்ன நாட்களில் தினந்தோறும் ஆறு காட்சிகள் நடைபெறும். (கலைவாணர் அரங்கில் 4 காட்சிகள்; மகாராணி டாக்கீஸில் 2 காட்சிகள்) நுழைவுக் கட்டணம் ரூ. 1.

## விமரசனம்

### சட்டைக்காரி

ஆங்கிலோ இந்தியக் குடும்பத்தைச் சேர்ந்த பெண் ஒருத்தியும், இந்து மதத்தில் அழுத்தமான பற்றுதலும், பக்தியும் வைத்துள்ள குடும்பத்தில் பிறந்த வாலிபன் ஒருவனும் காதலிக்கின்றனர். மதவேறுபாடு காரணமாக பல இடையூறுகள். ஆழ்ந்த காதலினல் ஆங்கிலோ இந்தியப்பெண் ஒரு குழந்தைக்குத் தாயாகிறாள்.

ஊரார் பழிப்பார்கள் என்று பயந்து வெளியூரில் அவள் தங்கி இருக்கும்போது, தந்தை இறந்து போகிறார்.

அனைதை விடுதியில் குழந்தையை விட்டுவிட்டு, ஊர் திரும்பிய அவள் குழந்தையைப் பிரிந்து இருக்க முடியாமல் தாய்ப் பாசத்தால் தவிக்கிறாள். ஊரைவிட்டு வெளிநாடு புறப்பட அவள் தாய் முயற்சிக்கிறாள். அந்த சமயத்தில் அவளது காதலனின்

2-ம் பக்கம் பார்க்க

# சங்கர் கணேஷுக்கு முத்துராமன் பாராட்டு

இசை அமைப்பாளர்கள் சங்கர் கணேஷ் ரசிகர் மன்ற முதலாண்டு விழா சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது. விழாவை யொட்டி கண்ணன்—முரளி குழுவினரின் மெல்லிசை நிகழ்ச்சி நடைபெற்றது.

விழாவிற்கு நடிகர் முத்துராமன் தலைமை வகித்துப் பேசுகையில் கூறியதாவது:—

திரையுலகில் சுப்பராமனின் இனிய இசையமைப்பை மறக்க முடியாது. அவர் இசையமைத்த தேவதாஸ், மணமகள் போன்ற படங்களில் இனிய பாடல்களை என்றும் மறக்க முடியாது. மறைந்த அந்த இசைமேதையின் சகோதரர்தான் சங்கர். சங்கரும் கணேசும் விஸ்வநாதனிடம் 18 ஆண்டுகள் பணியாற்றி குரு பக்தியுடன் பல அரிய விஷயங்களைக் கற்றுக் கொண்டவர்கள். இந்திப் படங்களுக்கும் தமிழ்ப் படங்களுக்கும் இடையில் போட்டியில் இதுபோன்ற இளைஞர்களால்தான் எதிர்த்து வெற்றிபெற முடியும். சங்கர்-கணேஷ் இசையமைக்கும் பாடல்கள் விறுவிறுப்பாகவும் இனிமையாகவும் இருக்கும் படங்கள் தோல்வி அடைந்தாலும், பாடல்கள் தோல்வி அடைவதில்லை.

குருவிடம் அடக்கமுடன் பக்தியாக கற்றால் தொழிலில் முன்[illegible]முடியும் என்பதற்கு சங்கர் கணேஷ் இருவரும் எடுத்துக்காட்டாக இருக்கிறார்கள்.

அவர்களிடம் உள்ள கண்ணன் - முரளி இருவரும் இங்கே இசை நிகழ்ச்சியை வழங்குகிறார்கள்.

கண்ணன் சுப்பராமனின் மகன் என்பதை அறிகின்றபோது மகிழ்ச்சிஏற்படுகிறது.

## செல்வி ஜெயந்திக்கு கவர்னர் பாராட்டு

ஜெயந்தி திரைப்பட அரங்கு அதிபர் ராமானுஜத்தின் மகள் செல்வி ஜெயந்தியின் பரத நாட்டிய அரங்கேற்றம் சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது.

பரதநாட்டிய அரங்கேற்றத்துக்கு தமிழக கவர்னர் கே. கே. ஷா தலைமை வகித்தார். அவர் பேசும்போது கூறியதாவது:—

"இந்தியாவில் கலையைப் போற்றுவதில் பேணி காப்பதில் தமிழ்நாடு முன்னணியில் நிற்கிறது. ராமானுஜம் தம்பதிகள் அத்தகைய கலை ஆர்வத்தினல்தான் தங்கள் ஒரே குழந்தையான ஜெயந்திக்கு பரத நாட்டியம் கற்றுத் தந்துள்ளனர்

இவ்வாறு கவர்னர் செல்வி ஜெயந்தியைப்பாராட்டினர்.

பரதநாட்டிய குரு சரலாவுக்கு நடிகை பானுமதி பொன்னாடை அணிவித்தார், ஏ. எல். சீனிவாசன் நன்றி கூறினர்.

ஒரே தந்தை படத்தில் ஜெய்சங்கர்.

கண்ணன் முரளி குழுவினர் தகுந்த [illegible]ரிசாக எதிர்காலத்தில் [illegible]பெற வாழ்த்துகிறேன்".

இவ்வாறு முத்துராமன் கூறினர்.

வி. ஜி. பி. சந்தோஷம், டைரக்டர் எஸ். பி. முத்துராமன் ஆகியோர் பேசினர்கள். பட அதிபர் சுப்ரமணிய ரெட்டியார் சங்கர் கணேஷ் ரசிகர் மன்ற மலரை வெளியிட்டுப் பேசினர் விழாவிற்கு நடிகை ஜெயசித்ரா வந்திருந்தார்.

Printed by S.V.G. Sowrirajulu at the M.G. P.S. Press No 4 South Bk Road, Madras-600028 and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu.
Honorary Editor: N. Muthukumarasami.

"எங்கம்மா சபதம்" படத்தில் முத்துராமன், சிவகுமார்.

## ஸ்ரீகாந்துக்கு சுபா ஆறுதல்

சாப்பிடுவதற்காக டைனிங் டேபிளில் வந்து உட்காருகிறான் ராஜு. வேலைக்காரி தங்கம் இட்லி, தோசையைப் பரிமாறிய பின்னரும் ராஜா சாப்பிடாமல் தங்கத்தின் முகத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறான்.

"ஏங்க சாப்பிடாமல் என் முகத்தையே பார்த்துகிட்டு இருக்கீங்க" என்று கேட்கிறாள் தங்கம்.

"நான் சாப்பிடும்போது எங்கம்மா என் முகத்தையே பார்த்துகிட்டு இருப்பாங்க. ஏம்மா என் முகத்தையே பார்க்கிறே என்று கேட்டால் "உன் முகத்தில் நான் என் முகத்தைப் பார்க்கிறேன்." என்று கூறுவார்கள். அதுதான் இப்போ உன் முகத்தில் என் முகம் தெரியுதான்னு பார்க்கிறேன்", என்கிறான் ராஜா.

"இன்பம், துன்பம் இரண்டையும் பிரதிபலிக்கிற கண்ணாடி நம்ப முகம்தானே. அது சரி சாப்பிடுங்க", என்கிறாள் தங்க[illegible]

"எங்க அம்மா தினமும் எனக்கு சாப்பாட்டை ஊட்டி விடுவாங்க. அவங்க இல்லாமல் நான் எப்படி இப்போ சாப்பிடுவேன்" என்று ராஜா அப்பாவித்தனமாகக் கேட்க "சரி சரி நீங்க சாப்பிடுங்கள், நானே ஊட்டிவிடுகிறேன்" என்று கூறி ராஜாவிற்கு சாப்பாட்டை ஊட்டி விடுகிறாள் தங்கம்.

இப்படியொரு க[illegible]சி சாந்தா கம்பைன்ஸ் "முகத்தில் முகம் பார்க்கலாம்" படத்திற்காக ஏவி எம். ஸ்டூடியோவில் படமாக்கப்பட்டது. ராஜாவாக ஸ்ரீகாந்தும், தங்கமாக சுபாவும் நடித்தனர் வாலி பாடல்களை எழுத வி. குமார் இசையமைக்கிறார்.

ஏவி. எஸ். ஜெயக்குமார், சி. எஸ். ராமகிருஷ்ணன் இருவரும் கூட்டாகத் தயாரிக்கும் இப்படத்தின் கதை வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புகளையும் என் எஸ். மணியம் ஏற்றுள்ளார்.

## "நான் அவனில்லை"

ஸ்ரீ நாராயணி பிலிம்ஸ் சார்பில் ஜெமினி கணேசன் தயாரிக்கும் "நான் அவனில்லை" படப்பிடிப்பு முடிந்துவிட்டது. பின்னணி இசை சேர்க்கும் வேலை பிரசாத் ஸ்டூடியோவில் நடைபெறுகிறது.

ஜெமினி கணேசன் ஒன்பது மாறுபட்ட வேடங்களில்நடித்துள்ளார்.

கே. பாலச்சந்தர் திரைக்கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்.

பி. ஆர். வரலட்சுமி, ராஜசுலோசனா, ஜெயசுதா, ஜெயபாரதி, லட்சுமி, கமலஹாசன் ஆகியோர் நடிக்கின்றனர்.

சுலோசனா பிக்சர்ஸ், பட ஆரம்ப விழாவில் முத்துராமன், டைரக்டர்கள் தேவராஜ், மோகன்.